# எம்பெருமானார் தரிசனம்

(விசிஷ்டாத்வைதம்)

ஸ்ரீ,உ,வே, காரப்பங்காடு வேங்கடாச்சார்ய ஸ்வாமியின் உபன்யாசத்தொகுப்பு



அன்னாரின் நூற்றாண்டு விழா நினைவு வெளியீடு


தொகுத்தவர்

அன்னாரின் சீடரான ஸ்ரீவில்லிபுத்தூர் வித்வான்

விஞ்சிமூர். கே. ஸ்ரீநிவாஸாச்சாரியார்.

ஸ்ரீ :



ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

# எம்பெருமானார் தரிசனம்

## (விசிஷ்டாத்வைதம்)

ந்யாய வேதாந்த வித்வான்
ஸ்ரீ.உ.வே. காரப்பங்காடு வேங்கடாச்சார்ய ஸ்வாமியின்
உபன்யாசத்தொகுப்பு

அன்னாரின் நூற்றாண்டு விழா நினைவு வெளியீடு
தாரண - பங்குனி - புனர்வசு

<u>தொகுத்தவர்</u>

அன்னாரின் சீடரான ஸ்ரீவில்லிபுத்தூர் வித்வான்
விஞ்சிமூர். கே. ஸ்ரீநிவாஸாச்சாரியார்.

ஸ்ரீ.உ.வே.காரப்பங்காடு வேங்கடாச்சார்ய ஸ்வாமியின்

நூற்றாண்டு விழா ஞாபகமாக
இப்புத்தகம் இலவசமாக வெளியிடப்படுகிறது.

புத்தக வடிவமைப்பு :-

எஸ். சம்பத்,
எஸ். சுந்தர் ராஜன் &
வி.எஸ்.வெங்கடாச்சாரி
19/29, நாச்சியார் தெற்கு மாட வீதி,
ஸ்ரீவில்லிபுத்தூர் - 626125.
☎ - 9443418731



ந்யாயவேதாந்த வித்வான், வைகுண்டவாசி

**ஸ்ரீ.உ.வே.காரப்பங்காடு வேங்கடாச்சார்ய ஸ்வாமி**

*ஆத்ரயான்வய பூஷணாச்ச ஜனகாத் லப்த்வா ந்ருஸிம்மார்யத:*
*சாஸ்த்ராணி ப்ரதீகாத் ததைவ வரதாசார்ய பரஸ்மாதபி |*
*கோவிந்தார்ய பதாச்ரிதம் நிருபம ப்ரக்யாத வாக்வைபவம்*
*சாந்த்யாத் யாத்மகுணாகரம் குருவரம் ஸ்ரீவேங்கடார்யம் பஜே ||*

ஸ்ரீ :



ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

# நூன்முகம்

ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தில் ஸ்வாமி **"எம்பெருமானர்"** ஆசார்யர்களுள் நடுநாயகமாகத் திகழ்ந்தவர். அவர் காலத்தில் வேதாந்த நூல்களுக்கு விபரீதமான கருத்துச் சொல்பவர்கள் பலர் இருந்தார்கள். அவர்கள் எல்லோரையும்

**"பேதையர் வேதப்பொருளிதென்றுஉன்னி *பிரமம் நன்றென்று
ஓதி மற்றெல்லாவுயிரும் அஃதென்று* உயிர்கள் மெய்விட்டு
ஆதிப்பரனோடொன்றாமென்று சொல்லுமவ்வல்லலெல்லாம்
வாதில் வென்றான் எம் இராமானுசன் மெய்ம்மதிக்கடலே".**

*(இராமானுச நூற்றந்தாதி -58 )*

என்ற பாசுரத்தில் சொன்னபடி வாதம் செய்து வென்று சச்சம்பிரதாயத்தை (விசிஷ்டாத்வைத மதத்தை) காத்துக் கொடுத்தார். அதனால் விசிஷ்டாத்வைத மதம் **"எம்பெருமானார் தரிசனம்"** என்று அழைக்கப்பட்டது. அத்தரிசனத்தை, அவரால் நியமிக்கப்பட்ட சீடர்களும், அஷ்டதிக்கஜங்களும், 74 சிம்மாசனாதிபதிகளும் அவர்களது வழிவகையினரும் **"ஊரும் நாடும் உலகமும் தன்னைப் போல்"** ஆகும்படி செய்தனர்.

இதை அனைவரும் அறியும்படி சொல்பவர்கள், தர்க்கம், வ்யாகர்னம், மீமாம்சை, வேதம் முதலிய சாஸ்திரகங்ளில் நல்ல வல்லுநர்களாக இருக்க வேண்டும். அத்தகைய வல்லுநர்கள் ஒரு ஒரு காலத்தில் தோன்றுவார்கள். அப்பொழுது பயன் பெறக் கூடியவர்கள் பயன் பெறுவார்கள்.

நிற்க, பட்டுக்கோட்டை அருகில் உள்ள காரப்பங்காட்டில் பிறந்து, தன் தகப்பனாரிடம், மேற்கூறிய வேத, வேதாந்த, சாஸ்திரங்களைக் கசடறக் கற்று, உபன்யாசங்களிலும், க்ரந்த

காலக்ஷேபங்களிலும், சாஸ்திரங்களை நுட்பமாக ஆராய்ந்து சொல்வதிலும் மிகச்சிறந்தும் பிரபல்யமாகவும் விளங்கியவர் **ஸ்ரீ.உ.வே. காரப்பங்காடு வேங்கடாச்சாரியார் ஸ்வாமி.** அவருடைய ஞானமும், ஆற்றலும் அளவிடமுடியாதது. சென்ற பல வருடங்களில் பிரபலமாக விளங்கிய, இன்றும் பிரபலமாக விளங்கி வருகின்ற பல வித்வான்கள், உபன்யாசகர்கள், காலக்ஷேப அதிகாரிகள் அவரிடம் பயின்றவர்களே.

வைகுண்டவாசியான அப்பேர்ப்பட்ட சிறந்த அறிஞருக்கு **தாரண - பங்குனி - புனர்வசு** அன்று **நூற்றாண்டு விழா** நடைபெறுகிறது. அவரது அபிமானிகளும், அவருடைய சீடர்களும் அவரது புகழையும் அவரால் சொல்லப்பட்ட விஷயங்களையும் நாடெங்கும் பரப்பி வருகிறார்கள். அவருடைய **நூற்றாண்டு விழா** ஞாபகமாக, **"விசிஷ்டாத்வைதம்"** என்ற சித்தாந்தத்தின் கருத்தை, **"பாருலகில் ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள் கூறுமின்"** என்பதற்கிணங்க, தெரிந்து கொள்ள விரும்புவோர்க்கு இந்நூல் வெளியிடப்படுகிறது. ஸ்ரீ. உ.வே. ந்யாய வேதாந்த வித்வான் **காரப்பங்காடு வெங்கடாச்சாரியார்** ஸ்வாமியின் உபன்யாஸத்தை, அவரிடத்தில் சிஷ்ய வ்ருத்தி பண்ணின அடியேன் கட்டுரை வடிவத்தில் அமைத்து வெளியிடும் பாக்கியம் பெற்றுள்ளேன்.

வேணும் விண்ணப்பம்.

தாஸன்
*வி.கே.ஸ்ரீநிவாஸாச்சாரியார்*

ஸ்ரீவில்லிபுத்தூர்.
தாரண - திருவாடிப்பூரம்

ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



ஸ்ரீமத்தயாபாலமுநயே நம:

# எம்பெருமானார் தரிசனம்
## (விசிஷ்டாத்வைதம்)

ஸ்ரீய: பதியான ஸர்வேஸ்வரனே மேலான தெய்வம். அவனிடத்தில் செய்யும் பக்தி ப்ரபத்திகள் சிறந்த உபாயம். அந்தப் பரமபுருஷனை அனுபவித்து மகிழ்விக்கிறது என்பது மேலான பலன். **அவனிடத்தில் செய்யும் கைங்கர்யமே சிறந்த பலன்** என்று சாஸ்திரங்களில் நிர்ணயிக்கப்பட்டுள்ளன.

சாஸ்திரங்களில் சிறந்த சாஸ்திரம் வேதம். வைதிகர்கள் அனைவரும் வேதத்தை முக்கியப் பிரமாணமாகக் (ஆதரமாக) ஒப்புக்கொண்டு தம் தம் சித்தாந்தங்களை ஸ்தாபிக்கிறார்கள். (நிறுவுகிறார்கள்). அப்படிப்பட்ட வேதத்திலே, கீழே சொல்லப்பட்டபடி, ஸ்ரீய: பதியான நாராயணனுக்கு தெய்வத்தன்மையும் பக்தி ப்ரபத்திகளுக்கு உபாயபாவமும், பகவதனுபவ கைங்கர்யங்களுக்கு புருஷார்த்தமும் (மேலான பலனும்) தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளன. இந்த வேதம் இன்று நேற்று உண்டான சாஸ்திரமன்று. அனாதியானது. ஒரு புருஷனாலே செய்யப்படாதது. சிறந்த ப்ரமாணம் என்பது எல்லா வைதிகர்களாலும் ஒத்துக்கொள்ளப்பட்டது. அப்படிப்பட்ட வேதத்திலே இந்த தத்துவ, ஹித, புருஷார்த்தங்கள் (உண்மைப்பொருள், உபாயம், மேலான பலன்) தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கையாலே இந்த சித்தாந்தமும் அநாதியான (பழமையான) சித்தாந்தம் தான். இன்று, நேற்று ஒருவராலே உண்டாக்கப்பட்ட சித்தாந்தம், மதம் என்று சொல்லுவதற்கில்லை. ஆனாலும் சிற்சிறு சமயங்களிலே, வேதமும், சாஸ்திரங்களும் அவைகளிலே சொல்லப்பட்ட அர்த்த விசேஷங்களும் நம்

போல்வர்கள் தெரிந்துகொள்ள முடியாமல் மறைந்துவிடுகின்றன. அப்படி வேத, வேதாந்தங்களுக்கு மறைவு ஏற்பட்டிருக்கிற காலத்திலே, மஹான்கள் அவதரித்து அதை பிரகாசப்படுத்துகிறார்கள். அந்த க்ரமத்திலே (வழியிலே) நம் ஸ்வாமி **எம்பெருமானார்**, இந்த வைதிக சித்தாந்தமானது ஒருவிதமாக மறைந்திருக்கிற காலத்திலே திருவவதாரம் செய்தருளி, வேதத்தில் மறைந்து கிடந்த இந்த அர்த்த விசேஷங்களை தம் உபதேச மொழிகளான ஸ்ரீபாஷ்யம் முதலான க்ரந்தங்களாலும் வாய்மொழி உபதேச மொழிகளாலும் உலகத்திலே ப்ரகாசமடையும்படியாகச் செய்திருக்கிறார். அதனால் தான் **எம்பெருமானார் தரிசனம்** என்ற ப்ரசித்தி ஏற்பட்டிருக்கிறது.

முதன் முதலிலே பகவான் நாராயணன்தான் புத்த ரூபத்தோடு அவதாரம் செய்தவன். அவன் உலகத்தை நிர்வகிக்கும்போது, பலவிதமாக அவதாரம் செய்வதுண்டு, பலவிதமாக உபதேசம் செய்திருப்பதுண்டு. நாராயணனே புத்த ரூபத்தோடு அவதாரம் செய்து, வேதம் ப்ரமாணமன்று, அதில் சொல்லப்பட்டவை அனுஷ்டிக்கத்தக்கவை (கடைப்பிடிக்கத்தக்கவை) அல்ல என்று ப்ரசாரம் செய்திருப்பதாக நம்முடைய க்ரந்தங்களில் (நூல்களில்) இருந்து தெரியவருகிறது. அந்த புத்தனுக்கு வைபாஷிகன், ஸௌத்ராந்திகன், யோகாசாரன், மாத்யமிகன் என்று நான்கு சிஷ்யர்கள். புத்தனுடைய உபதேசம் நன்றாகப் பலித்த இடம், மாத்யமிகன் என்ற சிஷ்யனைச் சொல்லலாம். அவனுடைய மதத்திலே, **"ஒன்றுமில்லை, சர்வம் சூன்யம்"** என்பதுதான், முக்கியமான கொள்கை. **"சூன்யம் தத்துவம்"** என்று சொல்லுகிறவன் மாத்யமிகன். அந்த மாத்யமிக பக்ஷமானது வ்யாஸராலே அருளிச் செய்யப்பட்டிருக்கிற ப்ரம்ஹ சூத்ரத்திலே அனுவதிக்கப்பட்டு (மேற்கோள் எடுத்து) கண்டிக்கப்பட்டிருக்கிறது. இது எல்லா வைதிக மதஸ்தர்களும் ஒப்புக்கொண்டுள்ள விஷயம். அவன் சொல்லுகிற மதம், யுக்தி இவைகளை நன்றாகச் சொல்லிக் கேட்கிறபோது கேட்கிறவர்-களுக்கு, கேட்கவேணும் என்கிற எண்ணமே தோன்றும். அவனைப் பார்த்து சிலர், **"ஒன்றுமில்லை, எல்லாம் சூன்யம்"** என்று தெரிவிக்கிறாயே, அப்படித் தெரிவிப்பதற்கு ஆதாரத்தைக்

காண்பிக்கவேணும். ஒருவன் ஆதாரத்தைக் காட்டியே தன் கொள்கையை நிலைநாட்ட வேணும். "**சர்வம் சூன்யம்**" என்று சொல்வதற்கு என்ன ஆதாரம்? என்ன யுக்தி? என்று கேட்கிற-போது, ஒரு பொருள் உண்டு என்று சொல்லுகிறவர்கள் தான் ஆதாரம், யுக்தி இவைகளைக் காட்ட வேண்டும். இல்லை என்று சொல்பவனுக்கு ஆதாரமும் வேண்டியதில்லை, யுக்தியும் வேண்டியதில்லை என்று அவன் சொல்லுகிறான். இப்படிப்பட்ட மதமானது உலகத்திலே எங்கும் பிரசாரமடைந்து வருகிற காலத்தில் ஆதிசங்கரருடைய காலம் என்று தெரிகிறது. சங்கரர் செய்த உபநிஷத் பாஷ்யம்,. சூத்ர பாஷ்யம், கீதா பாஷ்யம் இவைகளை ஒருவன் நன்றாகப் படித்துப் பார்ப்பானேயானால் மாத்யமிகனைப் பலவிடங்களில் கண்டித்து அத்வைதத்தை ஸ்தாபித்திருப்பதாக (நிலைநாட்டியிருப்பதை) நன்றாக அறியலாம். அந்த விஷயத்தை முதன் முதலில் கொஞ்சம் சுருக்கமாகப் பார்க்கலாம். ஒன்றுமில்லை என்று சொல்லுகிற மாத்யமிகனைப் பார்த்து சங்கரர் கேட்கிறார். "உலகத்திலே பல பதார்த்தங்கள் உண்டு. அந்த பதார்த்தங்களை உலகத்தில் உள்ளவர்கள் பார்க்கிறார்கள். இவன் மனுஷ்யன். இது ரதம், இது குளம், இது வீதி, இது கோயில் என்று தோற்றுகிறது. ஒன்றுமில்லை என்று நீ சொல்லுகிறாயே. உலகத்தில் பல பொருட்கள் தோற்றுகிறதே? அதை உன் மதத்தில் எப்படி நிர்வகிப்பாய்? அந்த அனுபவத்தை எப்படி நிரூபணம் பண்ணுவாய்?" என்று கேட்கிறார். அதற்கு மாத்யமிகன், "பொருள் இருந்தும் தோற்றலாம் இல்லாமலும் தோற்றலாம்; தோற்றுவதற்கு என்று ஒரு பொருள் உண்டு என்று நிச்சயிப்பதில்லை. உலகத்திலே ஒரு பொருளும் இல்லை. ஆனால் தோற்றுகிறதே என்றால், இருந்துதான் தோற்றவேணும் என்று இல்லை, இல்லாமலும் தோற்றலாம். ஓரிடத்திலே ஒரு பழுதை கிடக்கிறது. பாம்பு என்று தோன்றுகிறது. மற்றோரிடத்திலே ஒரு சிப்பி கிடக்கிறது. வெள்ளி என்று தோன்றுகிறது. பாம்பு உண்டா? வெள்ளி உண்டா? என்றால், இருக்கும் பொருளே தோன்றவேணும் என்கிறதில்லை. இல்லாத பொருளும் தோன்றுகிறது என்று சொல்லுகிறோம்" என்று சொல்லுகிறான். அந்த இடத்திலே, அவனைப் பார்த்து ஆதிசங்கரர்,

"உலகம் இல்லை; உண்மையில் இல்லாமல் இருக்கிறபோது அதை நாம் ஒத்துக்கொள்கிறோம். ஆனால் பழுதை கிடக்கிற இடத்தில் தான் பாம்பு என்று தோற்றுகிறது. முத்துச்சிப்பி கிடக்கிற இடத்தில் தான் வெள்ளி என்ற தோற்றம் ஏற்படுகின்றது. இல்லாத இடத்தில் தோற்றுகிறதில்லை. பழுதை இடத்தில் இருக்கிற இடத்தில் தானே பாம்பு என்கிற தோற்றம்! சிப்பி இருக்கிற இடத்தில் தானே வெள்ளி என்கிற தோற்றம்! அந்தத் தோற்றத்திற்கு பழுதை, சிப்பி என்கிற பொருள் (ஆதாரமாய்) அதிஷ்டானமாய் இருக்கிறது. ஓரிடத்திலே பழுதையே இல்லை என்றால் பாம்பு என்கிற தோற்றமே இல்லை. சிப்பியே இல்லை என்றால் வெள்ளி என்கிற தோற்றமே இல்லை. பழுதையும், சிப்பியும் இருக்கிற இடத்தில் தான் பாம்பும் வெள்ளியும் தோற்றுகிறது. அதனால் அதிஷ்டானம் (ஆதாரம்) என்னும் ஒரு பொருளை அவசியம் ஒத்துக்கொள்ளவேணும். அந்த அதிஷ்டானம் (ஆதாரம்) என்னும் பொருள்தான் ப்ரம்ஹம். அந்த ப்ரம்ஹத்தைச் சத்யமாக ஒத்துக்கொள்ளவேணும். நீர் உலகம் இல்லை என்று சொல்லுவது போலே, நாமும் உலகம் இல்லை என்று ஒத்துக்கொள்கிறோம். அதிஷ்டாணப் (ஆதார) பொருளான ப்ரம்ஹத்தினிடத்திலே உலகம் இல்லை, தோற்றுகிறது, தோற்றத்தாலே" என்று மாத்யமிக மதத்தைக் கண்டனம் பண்ணி, ப்ரம்ஹம் உண்டு என்பதை ஸ்தாபித்திருக்கிறார். (நிறுவியிருக்கிறார்) அவருடைய க்ரந்தங்களுக்குள்ளே ப்ருஹதாரண்யகோபநிஷத்தை ஒருவர் நன்றாகப் படித்துப் பார்ப்பவரேயானால், மாத்யமிகனுக்கும். ஆதிசங்கரருக்கும் இடையேயான அதிகமான வாதங்களையும், ஸர்வ ஸூன்யவாதியான மாத்யமிகப் பக்ஷம் கண்டிக்கப்பட்டு அதிஷ்டானமான (ஆதாரமான) ப்ரம்ஹம் என்ற வஸ்து ஒன்று உண்டு என்று ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது என்பதை உண்மையில் நன்றாக அறியலாம்.

மாத்யமிகனுக்கும் ஆதிசங்கரருக்கும் எந்த முறையிலே வாதம் நன்றாக ஏற்பட்டிருக்கிறதோ?, அதே முறையில் தான் ஆதிசங்கரருக்கும் நம் ஸ்வாமி எம்பெருமானாருக்கும் வாதம் ஏற்பட்டிருக்கிறது. அதாவது பழுதை இல்லாத இடத்திலே பாம்பு என்கிற தோற்றம் ஏற்படுவதில்லை. பழுதை இருக்கிற இடத்தில் தான்

தோற்றுகிறது. அதனாலே பழுதையை சத்யப் பொருளாக ஒத்துக்கொள்ளவேணும். அதைப் போலே, ப்ரம்ஹம் என்கிற அதிஷ்டாணப் (ஆதாரப்) பொருளை ஒத்துக்கொள்ளவேணும். ப்ரம்ஹத்தினிடத்தில் உலகம் பொய்யாகத் தோற்றுகிறது என்று சங்கரர் ஸ்தாபித்ததை, நம் ஸ்வாமி சங்கரரோடு வாதம் செய்து, ப்ரபஞ்சத்தை சத்யமாக ஒத்துக்கொள்ளவேண்டும் என்பதை சங்கரர் போகிற வழியிலேயே போய் இசையும்படியாகச் செய்திருக்கிறார். இந்த வாதம் மிகப் பெரிய வாதம். இதைப் பற்றிய க்ரந்தங்கள் (நூல்கள்) பல உண்டு. இந்த வாதத்தை நன்றாகச் சொல்லி அனுபவிக்கவேணுமேயானால், மேன்மேலும் கேள்விகள் ஏற்படும். அதற்குப் பரிகாரம் சொல்லவேண்டும். அந்த முறையிலே ஸ்ரீபாஷ்யம் முதலான க்ரந்தங்களை நாம் ஆசார்ய முகமாக அனுபவிக்கிற-போது ஸ்வாமியினுடைய மேதாவிலாசமும் அவர் நமக்காகச் செய்த உபகாரத் தன்மையும் மிக ஆச்சர்யமாக விளங்கும். எல்லோரும் அனுபவிக்கக்கூடிய ரீதியிலே இப்பொழுது சில வாதங்களைப் பார்க்கலாம்.

பழுதையைப் பார்க்கிறபோது பாம்பு என்கிற தோற்றம் உண்டாகிறது. பழுதை இல்லை என்றால் அந்த தோற்றம் இல்லை. பழுதையை அவசியம் ஒத்துக்கொள்ள வேணும் என்று சொல்லுகிறது போலே,"வேறு ஒரு இடத்தில் பாம்பு என்கிற பொருள் சத்தியமாக இல்லாமல் இருந்தால், பழுதை இருக்கிற இடத்தில் பாம்பு என்கிற தோற்றம் உண்டாகுமா" என்று நம் ஸ்வாமி கேட்கிறார். குளங்களிலே, ஏரிகளிலே, வெயில் காலங்களில் வறண்டு கிடக்கிற பொழுது வண்டல் மணல்களிலே வெள்ளையாக இருக்கிற முத்தச் சிப்பிகளை நாம் பார்க்கலாம். அதற்கு வெண்மை நிறம் உண்டு. பாளபள்யமும் உண்டு. அந்தச் சிப்பியைப் பார்க்கிற காலத்தில் வெள்ளி என்கிற தோற்றம் சிலருக்கு ஏற்படும். அதை எடுக்கச் செல்வர்கள். "வெள்ளி என்கிற பொருள் வேறு ஒரு இடத்திலே சத்யமாக இல்லாமல் இருந்தால், அந்தச் சிப்பியைப் பார்க்கிறவனுக்கு வெள்ளி என்கிற தோற்றம் ஏற்படுமா?" என்று நம் ஸ்வாமி கேட்கிறார். ஒரு விஷயத்தைத் திருப்பித் திருப்பிச்

சொல்லுவதாகத் தோற்றும். அதைச் சொல்லித்தான் ஆகணும். பௌணருத்யத்தைப் (கூறியது கூறல்) பார்க்கலாகாது. சங்கரர் மாத்யமிகனைப் பார்த்து என்ன கேட்டார்? "பழுதையே இல்லாமல் போனால் பாம்பு என்ற தோற்றம் உண்டாகிறதா? அந்த தர்மத்தை ஒப்புக்கொள்ளுகிற போது அதிஷ்டாணம் (ஆதாரம்) என்கிற பொருளை ஒத்துக்கொள்ளவில்லையா?" அப்படிச் சொல்லுகிற உம்மைப்பார்த்து நான் கேட்கிறேன். "மற்ற இடங்களிலே பாம்பு என்ற பொருளோ அல்லது வெள்ளி என்ற பொருளோ உண்மையிலே இல்லை என்று வைத்துக்கொள்வோம். பழுதையைப் பார்க்கிற பொழுது பாம்பு என்றும் சிப்பியைப் பார்க்கும்பொழுது வெள்ளி என்றும் தோற்றம் ஏற்படுமா? அந்த அதிஷ்டாணப் (ஆதாரப்) பொருள் அவசியம் வேணும் என்று மாத்யமிகனைப் பார்த்து நீர் போராடினது போலே, எந்தப் பொருள் தோற்றும் பொருளோ, எந்தப் பொருளில் ப்ரமம் ஏற்படுகிறதோ, அது மற்றோரிடத்தில் உண்மைப் பொருளாகத் இருக்கவேணும். அதில்லாமல் போனால் அந்தத் தோற்றம் ஏற்படாது. இப்படிப் பார்க்கிறபொழுது உலகம் சத்யமாக இருந்தால்தான் நிர்வாகம் பண்ண முடியுமே தவிர உலகம் சத்யமில்லை என்றால் பொய் என்பதற்கு இடமில்லை." சங்கரருக்கு இப்படிப்பட்ட யுக்திகளைச் சொல்லி உலகம் சத்யம் என்று ஒத்துக்கொள்ளும்படி கொண்டுவிட்டிருக்கிறார் இராமானுஜர். இது தான் அவர் போகின்ற வழி. அதிலே மாத்யமிகனுக்கு வேதம் ப்ரமாணமில்லை, வேதத்தைக் கொண்டு சொல்லவேண்டிய விஷயம் அவனுக்கில்லை. சங்கரர் வைதிகரானபடியாலே வேதத்தைக் கொண்டு தம்முடைய சித்தாந்தத்தை ஸ்தாபிக்க வேண்டியவராய் இருக்கிறார். அத்வைதம் தத்வம் என்று சொல்லி, வேதம் ப்ரமாணம் என்று சொல்லி அத்வைதத்தை ஸ்தாபிக்கிற பொழுது சில சிரமங்கள் எல்லாம் அவருக்கு வந்து சேர்கிறது. சங்கரரும் வைதிகர். நம் ஸ்வாமி இராமானுஜரும் வைதிகர். வைதிகர்களானபடியாலே இவர்கள் இருவரும் வேதம் முதலான சாஸ்திரங்களை ஆதரமாகக்காட்டி தங்கள், தங்கள் கொள்கைகளை ஸ்தாபிக்க வேண்டியவர்களாய்ப் பார்க்கப்படு-கிறார்கள். மாத்யமிகனுக்கு வேதத்தை ப்ரமாணமாகக் காட்ட-வேண்டிய அவசியமில்லை. வேதத்தைப் ப்ரமாணமாகக்

காட்டி, அந்த வேத வாக்கியங்களின் கருத்தைத் தெரிவித்து, *அத்வைதத்தைத்தான் வேதவாக்கியம் சொல்லுகிறது என்று சங்கர்* சொல்லவேண்டியவர். *விசிஷ்டாத்வைதத்தைத்தான் வேதவாக்கியம் சொல்லுகிறது என்று இராமானுஜர் சொல்லவேண்டியவர்.* அந்த முறையிலே இருவருக்கும் ஏற்பட்டிருக்கும் வாதப் பிரதி-வாதங்களை நாம் சொல்லி அனுபவிப்போமேயானால், வேத பாஷ்யங்களுக்கு இன்னது தான் கருத்து என்று இவர் நிர்ணயித்திருக்கிறாரே, **இராமானுஜர் போகிற வழி மிக ஆச்சர்யமான வழி.**

நாம் எல்லோரும் அதிர்ஷ்ட வசத்தாலே இராமானுஜ மதத்தைச் சேர்ந்தவர்களாகப் பிறந்திருக்கிறோம். ஸ்வாமி அவதாரம்பண்ணி க்ரந்தங்களையும், வாய்மொழி உபதேசங்களையும் உபதேசித்திருக்கிறார். அந்த சந்ததியிலே சில மகான்கள் வந்துகொண்டு அந்த அர்த்தங்களை யதோசிதம் (இயன்றவரை) உபதேசித்துக் கொண்டு வருகிறார்கள். ஒரு குறை. என்ன குறை என்றால், காலக்ரமேன (காலப்போக்கில்) அந்த க்ரந்தங்களுடைய அர்த்தத்தை, அதை அவசியம் கற்று அறியவேணுமென்று பிறந்திருக்கிற நாமே விட்டுவிட்டோம். இதுக்கு உதாரணம் சொல்லலாம். 16 கலையோடு சந்திரன் உதயமாகி பிரகாசிக்கிறான். நகரத்திலே ப்ரகாசிக்கிற பொழுது சந்திரனுடைய உதயத்தைக் கண்டு பலபேர் வாழ்ந்து போகிறார்கள். காட்டிலே சந்திரன் நன்றாகப் பிரகாசிக்கிறபொழுது அனுபவிக்கிறவர்கள் இல்லை. காடுகளிலே ப்ரகாசிக்கிற சந்திரன் எப்படியோ அதுபோல நம் ஸ்வாமியினுடைய ஸ்ரீபாஷ்யம் முதலான க்ரந்தங்கள் இருக்கின்றன. ஆனால் நம்முடைய சமூகத்திலே அப்படிப்பட்ட க்ரந்தங்களை அவசியம் தெரிந்துகொள்ள வேணும். அதன் பின் எவ்வளவு முடியுமோ அதை கடைப்பிடிக்க வேணும் என்கிற எண்ணம் யாருக்கும் ஏற்படுவதில்லை. அது 100க்கு 99 பேருக்கு இல்லை என்று சொல்லுவதற்கு இஷ்டமில்லை. 100க்கு 99 பேருக்கு இல்லை என்று சொன்னால் 1000க்கு 10 பேர் தேறுகிறது. 1000க்கு 10 பேர் என்றால் 10000க்கு 100 பேருக்கு அந்த எண்ணம் இருக்கிறது என்று ஆகிவிடும். கோடியிலே ஒருவருக்குக் கூட அந்த எண்ணம் இல்லை என்று நம்

சமுகத்திலே சொல்லவேணும். அதற்கு ரொம்ப சிரமப்பட்டு நம்முடைய க்ஷேமத்திற்காக எவ்வளவோ காரியத்தைச் செய்திருக்கிறார்கள். அதை அனுபவிப்பதற்கு இட்டுவைத்தும் நாம் அனுபவிக்காமல் இழந்திருக்கிறோம். அதற்கு **இழந்தோம் என்கிற இழவுமின்றிக்கே** என்று சம்பிரதாயத்தில் வாக்கியம் சொல்லுவதுண்டு. இழந்துவிட்டோம் என்கிற துக்கம் கூட நம் சமுதாயத்தில் இல்லை. இழந்துவிட்டோம் என்கிற துக்கத்தை அவசியம் தெரிந்துகொள்ள வேணும். அந்த துக்கமில்லாமல் அவருடைய க்ரந்தங்களையும் உபதேசங்களையும் அனுபவிக்கும்படியாக வந்து சேரவேணும். ஸ்ரீவைஷ்ணவ சமுதாயத்தில் இருக்கும் குறைகளைப் பற்றி முதலிலே நோக்கவேணும். இதில் ருசியே அநேகமாக ஒருவருக்கும் ஏற்படுவதில்லை.

வேத வாக்கியத்திற்கு சங்கரரும் அர்த்தம் பண்ணுகிறார். இராமானுஜரும் அர்த்தம் பண்ணுகிறார். உலகத்திலே சிலர் வேறு மொழிகளிலே சில க்ரந்தங்களை மொழி பெயர்த்திருக்கிறார்கள். சிலரோடு கூட நாம் பழகுகின்றோம். லோகத்திலே ஒருவிதமாக சம்பந்தம் ஏற்படுகிறது. அந்த காலங்களிலே சிலபேர் என்ன சொல்லுகிறார்கள் என்றால், சங்கரருக்கு ஞானம் ரொம்ப அபாரம், இராமனுஜருக்கு ஹ்ருதயம் சிறந்தது என்று இப்படியெல்லாம் சொல்லுகிறார்கள். இராமானுஜருக்கு ஹ்ருதயம் சிறந்தது என்று சொல்லுவதால் ஞானம் சிறந்ததில்லையோ என்று என் போல்வாருக்குத் தோன்றுகிறது. சங்கரருடைய ஞானத்தையும், இராமானுஜருடைய ஞானத்தையும் தடஸ்தமாக (நடு நிலையாக) இருந்து பார்க்கவேணும். ஒரு ஸ்ரீவைஷ்ணவன் சொன்னால் நன்றாக இருக்காது. நம்முடைய ஆசார்யன் என்று நம்முடைய ஆசார்ய ப்ரபாவத்தை (புகழை) வெளியிடுவதாக நினைக்கக் கூடாது. நமக்கு இப்படிப்பட்ட சாஸ்திரங்களிலே பரிச்சயமில்லை. இருக்கிறது என்று சொன்னாலும், இராம சரிதத்தைக் கேட்பது, அருளிச்செயலைக் கேட்பது, ரஹஸ்ய க்ரந்தங்களில் சில விஷயங்களைச் சொன்னால் கேட்பது, இப்படி நம்முடைய சரித்ரம் இருக்கிறதே தவிர நம்முடைய

பூர்வாசாரியர்களில் நடுநாயக ஸ்தானத்தில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானாருடைய க்ரந்தங்களில் நமக்கு சம்பந்தம், ஸ்ரீவைஷ்ணவ சமுதாயத்திற்கு இல்லை என்றே சொல்லிவிடலாம் அவருடைய மேதாவிலாசம் மிகஆச்சர்யமானது. அவர் பேசுகிற பேச்சு, அவர் போகிற வழி, அதிலிருக்கிற ரஸம் சொல்லி முடியாது. ஆனால் அனுபவிக்கிறதுக்கு மாத்திரம் அதிகாரிகள் இல்லை. அதனால் தான் விசிஷ்டாத்வைதம் என்னும் இந்த விஷயம் பற்றிச் சொல்லப்படுகிறது. இது கொஞ்சம் கஷ்டமான விஷயந்தான். ஆனால் நம் பாஷ்யகாரர் போகிற வழி எல்லோருக்கும் தெரியவேணும். வேதவாக்கியத்திற்கு அர்த்தம் சொல்லி, வேத வாக்கியத்தின் கருத்தை இவர் மிகஆச்சர்யமாக வெளியிட்டிருக்கிறார்.

*"தஸ்மை ராமானுஜார்யாய நம : பரமயோகினே*
*யஸ்மை ஸ்ருதி ஸூத்ராணாம் அந்தர்ஜ்வரம் அஸீஸமத்"*

என்று ஒரு ஸ்லோகம்.

<u>அதன் அர்த்தம்</u> : வேத வாக்கியங்களுக்கும் ஸ்ருதிகளுக்கும் சூத்ரங்களுக்கும் மற்றவர்களால் ஏற்பட்டிருக்கும் ஒரு வாதப்-பிரதிவாதங்களை இந்த இராமானுஜர் என்று சொல்லக்கூடிய யோகிதான் சரியான முறையில் முடிவு செய்தவர். அந்த ஸ்ருதி. ஸ்ம்ருதி சூத்ரங்களில் உண்டான கஷ்டங்களை போக்கி தெளிவு பண்ணினவர்.

இது அபிமானத்தாலே சொல்லுகிற வார்த்தையல்ல. பக்ஷபாதத்தாலே சொல்லுகிற வார்த்தையல்ல. ஆழ்வார், திருவாய்மொழியிலே நாராயண பரத்வத்தை ஸ்தாபிக்கிற காலத்திலே, சில இடங்களிலே அவர் அருளிச் செய்கிற பொழுது நம் தலையிலே அந்தக் கருத்தை வைத்துப் பேசுவர். மிகவும் அழகாக இருக்கும்.

*பேசநின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும் பிறர்க்கும்*
*நாயகன் அவனே* கபால நன்மோக்கத்துக் கண்டுகொண்மின்*

(திருவாய்மொழி - 4-10-4)

இதை ஆழ்வார் அருளிச் செய்தார்.

**இதன் பொருள் :**

உலகத்தில் மூன்று தெய்வங்களை முக்கியமாகச் சொல்லுவார்கள். மூன்று தெய்வங்களில் ஒன்றான பிரம்மாவிற்கும் ஐந்து தலை இருந்தது. சிவனுக்கும் ஐந்து தலையிருந்தது. ப்ரம்மாவினுடைய ஐந்து தலைகளில் ஒரு தலையை சிவன் கிள்ளிவிட்டான். பிதாவினுடைய தலை அவன் கையில் ஒட்டிக்கொண்டதால் அவன் கபாலியாகிவிட்டான். அந்த ரோகம் நீங்குவதற்காக பகவானுடைய துணை வேண்டியிருந்தது. பகவானுடைய க்ருபையினாலே அந்த தோஷம் நிவ்ருத்தியாக சிவன் ஸ்வஸ்தனானான். மூன்று தெய்வங்களுக்குள்ளே ஒரு தெய்வம் தலையை இழந்த தெய்வம். ஒரு தெய்வம் தலை ஒட்டிக்கொண்டதால் கபாலியான தெய்வம். ஒரு தெய்வம் அதின் ரோகத்தைப் போக்கின தெய்வம். இந்த தெய்வத்துக்குள் யாருக்கு **பரத்வம் (மேன்மை)** சொல்லலாம். நீங்களே சொல்லுங்கோள், பாருங்கோள் என்கிறார்.

ஆழ்வாருடைய உபதேசங்கள் எல்லாம் பிரதிவாதிகள் கூட இசையும் படியாக அமைதியாக, மிகவும் அழகாய்ச் சொல்லுவர். அதைப்போல ஸ்ருதிகளுக்கு அர்த்தம் சொல்லுகிறபோது சங்கரர் சொல்லுகிற விதத்தையும் இராமானுஜர் சொல்லுகிற விதத்தையும் சில வாக்கியங்களில் பார்ப்போம். இதில் **விசிஷ்டாத்வைதம் வேத தாத்பர்யம்** என்பதை எப்படி எல்லோரும் இசையும்படி இவர் சொல்லியிருக்கிறார். அதை நாம் எல்லோரும் ஸகஜமாக அனுபவிக்கலாம். ஒரு வாக்கியத்திற்கு அர்த்தம் பார்ப்போம். முதன் முதலில் இரண்டு சித்தாந்தங்களுக்கும் அர்த்தம் பார்க்க-வேணும். அத்வைதம் தெரியாமல் விசிஷ்டாத்வைதம் தெரிந்து-கொள்ள முடியாது. நம் ஸ்வாமியினுடைய க்ரந்தங்களை பயிற்சி பண்ணுகிறபோதே அத்வைதம் இவர்களுக்கு நன்றாக மனதில் படும். அத்வைத க்ரந்தங்களை பயில்கிறவர்களுக்குக் கூட, ஸ்வாமி அத்வைதத்தை தெளிவாக விளக்குகிற மாதிரி அவர்கள் க்ரந்தங்களிலே தெளிவாகப்படாது. அப்படி தெளிவாய்ச் சொல்லுகிற சாமர்த்யம் ஸ்வாமியினிடத்தில் மிக ஆச்சர்யமாய் உள்ளது.

<u>ஒரு வாதம்</u>

*ஸதேவ ஸௌம்யேதமக்ர ஆஸீத் ஏகமேவாத்விதீயம்*

என்று சாந்தோக்ய உபநிஷத்தில் ஒரு வாக்கியம். ஸத்வித்யையில் சிஷ்யனுக்கு ஆசார்யன் உபதேசம் செய்கிற-பொழுது முதன் முதலிலே சொன்ன வாக்கியம். இதே வாக்கியத்திற்கு சங்கரர் சொல்லும் அர்த்தத்தையும் பார்க்கலாம். இராமானுஜரின் வ்யாக்யானத்தையும் பார்க்கலாம். ஸ்ரீவைஷ்ணவன் என்பதற்காக இராமானுஜ மதத்தை ஆதரிக்க வேண்டாம். சொல்லிக் கேட்கிறபோது

*பேசநின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும் பிறர்க்கும்*

*நாயகனவனே* கபால நன்மோக்கத்துக் கண்டுகொண்மின்*

என்று ஆழ்வார் பாசுரத்தைச் சொல்லிக் கேட்கிற பொழுது உண்மை எப்படிப் படுகிறதோ அதுபோல உண்மை நன்றாக படும். சங்கரர் சொல்லுவதையும் பார்க்கலாம். இராமானுஜர் சொல்லுவதையும் பார்க்கலாம். இவர் சொல்லுவதற்கு ஆதாரங்களைக் காட்டி-யிருக்கிறார்கள். அதையும் பார்க்கலாம். அதைச் சொல்லி அனுபவிக்கிற-பொழுது **அந்த ஸ்ருதிக்கு அர்த்தம் சொல்லுகிற சாமர்த்யம், பாஷ்யம் செய்கிற பெருமை இராமானுஜர் ஒருவருக்கே உண்டு.** ஸ்ருதியினுடைய கருத்தை இவர் உள்ளபடி உணர்ந்து வெளியிட்ட பெருமை இவர் ஒருவருக்கே உண்டு. நடு நிலையிலே நோக்கினால் மனதில் படும்.

<u>இப்பொழுது என்ன வாதம் என்றால்,</u>

மாத்யமிகனுடைய ப்ரசாரம் உலகத்திலே நன்றாக இருந்து-கொண்டு இருந்தபோது ப்ரம்ஹமும் இல்லை. உலகமும் இல்லை.

ஆதி சங்கரருடைய காலத்திலே ப்ரம்ஹம் உண்டு. உலகமில்லை என்று தேறிற்று.

இராமானுஜருடைய காலத்திலே ப்ரம்ஹமும் உண்டு. ப்ரம்ஹத்திற்கு குணங்கள் உண்டு. ப்ரம்ஹத்திற்கு திவ்யமங்கள

விக்ரஹமுண்டு. ப்ரம்ஹத்திற்கு சரீரமாக சேதனா சேதனங்களான ப்ரபஞ்சமும் (உலகமும்) உண்டு. **அந்த ப்ரம்ஹம் நாராயணன்** என்ற அர்த்தம் தேறிற்று.

சங்கரருடைய வாதம், "ப்ரம்ஹம் உண்டு என்பதை ஒத்துக் கொள்கிறோம், ப்ரம்ஹத்திற்கு குணங்கள் இல்லை, விக்ரஹம் இல்லை, அசித்து என்கிற பொருளும் இல்லை, ஜீவன் என்று சொல்லப்படும் பொருளும் இல்லை, அந்த ப்ரம்ஹம் சுத்தமாக இருக்கிறது " என்பது.

அதற்கு என்ன அர்த்தம்?

"ஒன்றுமில்லை. அந்த ப்ரம்ஹம் மாத்திரம் இருக்கிறது. அதனாலே சுத்தம்" என்று அவர்கள் சொல்கிறார்கள். அது அத்வைத க்ரந்தங்களிலே அவர்கள் சொல்லியிருக்கிற விதத்தை அனுசரித்துப் பார்க்கலாம்.

இந்த கை கால் முதலிய அவயவங்களோடு கூடின பிண்டம் சரீரம். இது அசித். இதைப்போல ஒரு குடம், ஒரு வஸ்திரம் முதலிய பொருள்கள் எல்லாம் அசேதனப் பொருள்கள். அசேதனம் என்று எதைச் சொல்கிறது என்றால், அறிவில்லாத வஸ்துவைத்தான் அசித் (அசேதனம்) என்கிறது. ப்ரம்ஹத்தையும், அறிவில்லாத அசேதனத்தையும் எடுத்துப் பார்க்க வேணும்.

ப்ரம்ஹத்திற்கு வேற்றுப் பொருளான அசித்தும் கிடையாது. ப்ரம்ஹத்தினிடத்தில், ஞானம், சக்தி முதலிய குணங்களும் இல்லை. விக்ரஹங்களும் இல்லை. ப்ரம்ஹம் மாத்திரம் உண்டு. அது சுத்தம். *இது அத்வைதிகளுடைய கொள்கை.*

நம் ஸ்வாமி எம்பெருமானாரோ, ப்ரம்ஹத்தோடு ஒத்த பொருளான ஜீவனும் உண்டு. அசித்தும் உண்டு. ப்ரம்ஹம் விசிஷ்டமாய் இருக்கின்றது என்பவர். இதுதான் இரண்டுபேருக்கும் வாதம். விசிஷ்டம் என்றால் கூடினது என்று அர்த்தம். ப்ரம்ஹமானது ஜீவாத்மாவோடும் அசேதனப் பொருளோடும். கல்யாண

குணங்களோடும். விக்ரஹத்தோடும் கூடியிருக்கிறது. ப்ரம்ஹத்திற்கு குணங்கள் இல்லை. விக்ரஹம் இல்லை. அதோடு கூடின அசித் இல்லை. ஜீவன்களும் இல்லை. ப்ரம்ஹம் மாத்திரம் இருக்கிறது. அது சுத்தம் என்பது அத்வைதிகளின் கொள்கை.

அத்வைதம் என்கிற ஸப்தத்திற்கு த்வயோர் பாவ: த்விதா த்விதைவ த்வைதம், நாத்வைதம். அத்வைதம் என்று வ்யுத்பத்தி (விளக்கம்) சொல்லுவர்கள். இரண்டாவது பொருள் கிடையாது. அசித்தும் இல்லை. ஜீவனும் இல்லை. குணங்களும் இல்லை. ப்ரம்ஹம் மாத்திரம் இருக்கிறது. அது ஒன்றுதான் உண்மை. அதுதான் தத்துவம். *இதுதான் அத்வைத ஸப்தத்திற்கு அர்த்தம்.*

ப்ரம்ஹம் வேற்றுப் பொருளான அசேதனப் பொருளோடும் சேர்ந்திருக்கிறது. ஒத்த பொருளான ஜீவாத்மாவோடும் சேர்ந்திருக்கிறது. ஞானம், சக்தி முதலான கல்யாண குணங்களோடும் சேர்ந்திருக்கிறது. அந்த ப்ரம்ஹத்திற்கு ஏற்ற சிறப்புள்ள அதற்கு உண்டான திவ்ய மங்கள விக்ரஹமும் அதற்கு உண்டு என்று சொல்கிற மதம் விசிஷ்டாத்வைத மதம். குணங்களோடும் சேதனாசேதனங்களோடும் விக்ரஹத்தோடும் சேர்ந்திருக்கிற வஸ்து ஒன்று உண்டு. அந்த வஸ்துவிற்கு இணையில்லை. இதுதான் விசிஷ்டாத்வைத ஸப்தத்திற்கு அர்த்தம். இரண்டு பேருக்கும் வேதம் ப்ரமாணம்.

இப்போது உலகத்திலே சங்கீதத்தைப் பற்றின சபைகள் இருக்கின்றன. சங்கீத வித்வான்களுக்குள்ளே தாளத்தைப் பற்றி, ஸ்வரங்களைப் பற்றி, ராகத்தைப்பற்றி, கிளைராகத்தைப் பற்றி விவாதம் ஏற்படுகிறது. பத்தெட்டு வித்வான்களாக சர்ச்சை என்று ஒரு கோஷ்டியாக சேர்கிறார்கள். அவரவர்கள் ஆதாரங்களோடு இப்படித்தான் ராகம் இருக்கவேணும். இப்படித்தான் ஸ்வரம் இருக்கவேணும் என்று வாதம் பண்ணுகிறார்கள். அதில் பூர்வ பக்ஷ சித்தாந்தங்கள் எல்லாம் வித்வான்களுக்குள்ளே ஏற்படுகிறது. ஒருவர் நடுநிலை (மத்யஸ்தமாக) வகிக்கிறார். ஒருமித்து

வருகிறார்கள். சங்கீதத்திற்கு இந்த அம்சங்களெல்லாம் இப்பொழுது ஏற்பட்டி-ருக்கிறது. அத்வைதத்திற்கு இந்த அமைப்புகள் எல்லாம் இருக்கிறது. மைசூர் சமஸ்தானத்திலே கொஞ்ச காலத்திற்கு முன்பு இந்த மாதிரி சாஸ்திர சம்பந்தமான சர்ச்சை ரொம்ப பிரசித்தம். பரோடா சமஸ்தானத்திலும் மிகவும் நன்றாக உண்டு என்று கேட்டதுண்டு. இப்பொழுது ஒரு இடத்திலும் இப்படிப்பட்ட சர்ச்சை கிடையாது.

ஒன்றுமில்லை, ப்ரம்ஹம் தான் இருக்கிறது என்பதற்கு சங்கரர், "*ஸதேவ ஸௌம்யே தமக்ர ஆஸீத் ஏகமேவாத்விதீயம் ப்ரம்ஹ*" என்கிற வாக்கியத்தைத்தான் காட்டுகிறார். நம் ஸ்வாமி இராமானுஜர், இந்த வாக்கியத்தில் விசிஷ்ட ப்ரம்ஹம் சொல்லப்படுகிறது. சுத்தப்ரம்ஹம் சொல்லப்படவில்லை.. விசிஷ்டப்ரம்ஹம் நாராயணன். அவன் ஒருவன் தான். அந்த வஸ்து இரண்டில்லை என்பதை இதே வாக்கியத்தைக் ஆதரமாகக் காட்டித்தான் நம் ஸ்வாமி சொல்லி-யிருக்கிறார். நம் ஸ்வாமி போகிற வழியைப் பார்க்கலாம்.

புத்திரனைப் பிதா, ஹே ஸௌம்ய! என்று அழைத்து *இதம் பூர்வஸ்மின் காலே ஸதேவ ஆஸீத் ஏகமேவ ஆஸீத் அத்விதீயம் ஆஸீத்* என்கிறான். இங்கு அக்ரே என்ற சப்தத்திற்கு பூர்வஸ்மின் காலே - அதாவது ஸ்ருஷ்டிக்கு முன்புள்ள காலத்திலே என்று அர்த்தம். நம் ஸ்வாமி சங்கரரைக் கேட்கிறார்.

இதம் ஸர்வம் = இந்த எல்லாம்.
அக்ரே = ஸ்ருஷ்டிக்கு முன்புள்ள காலத்திலே
ஸதேவாஸீத் = சத் என்று சொல்லப்படும் பொருளாய் இருந்தது.
ஏகமேவாஸீத் = ஒன்றாய் இருந்தது.
அத்விதீயம்

என்று வாக்கியம் வருகிறது. முதன் முதலிலே என்று கேட்கிறார் என்றால், உம்முடைய மதத்திலே ப்ரம்ஹம் உண்டு, ப்ரம்ஹத்திற்கு வேற்றுப் பொருளான அசித்து கிடையாது என்று நீர் சொல்லுகிறீர். இந்த எல்லாம் ஸ்ருஷ்டிக்கு முன்புள்ள காலத்திலே ஸத் என்று

சொல்லப்படும் பொருளாய் இருந்தது என்பது இந்த வாக்கியத்திலே தெரிகிறது. ஸ்ருஷ்டிக்கு முன்புள்ள காலம் என்பது இருந்ததா? இல்லையா? காலத்தை வைத்து ஆக்ரே என்கிற வாக்கியம் சொல்லுகிறதா? இல்லையா? என்று கேட்கிறார். காலம் என்று ஒரு தத்துவம். அது அசித் தத்வம். அறிவில்லாத வஸ்து அது. ஜீவனைப் போல அந்த கால தத்துவத்தை சொல்லுவதற்கு இல்லை. பகவானைப் போல அந்த கால தத்துவத்தைச் சொல்லுவதற்கும் இல்லை.

அக்ரே ஸதேவ ஆஸீத் - ஸ்ருஷ்டிக்கு முன்புள்ள காலத்திலே

ஸச்சப்த வாச்யமான (ஸத் என்ற சொல்லுக்குப் பொருளாக) ப்ரம்ஹம் தான் இருந்தது என்று அர்த்தம் சொல்லுகிறீர்களே, அப்போது காலம் என்று ஒன்று உண்டு, அந்த காலத்திலே ப்ரம்ஹம் இருந்தது என்று தெரிகிறது. காலம் என்பது ப்ரம்ஹத்திற்கு வேற்றுப் பொருளா அல்லது ஒத்த பொருளா? என்று நாம் விசாரிக்கவேணும். காலம் அறிவில்லாத அசித் தத்துவம். ப்ரம்ஹத்திற்கு வேற்றுப் பொருள். வேற்றுப் பொருளான காலம் இருக்கிறபோதுதானே காலத்திலே ஸச்சப்த வாச்யமான ப்ரம்ஹம் தான் இருந்தது என்பது தெரிகிறது. வேற்றுப் பொருள் கிடையாது என்று சொல்லுகிறீர்களே? "அக்ரே என்ற சப்தம் எதைத் தெரிவிக்கிறது" என்று கேட்டிருக்கிறார். அத்வைதம் எவ்வளவோ வளர்ந்திருக்கிறது. வாதப் ப்ரதிவாதங்களைச் செய்கிறார்கள். க்ரந்தங்கள் எழுதுகிறார்கள். எல்லோரும் ஒத்துக் கொள்ளும்படியாக இந்த கேள்விக்கு சமாதானம் சொல்லியிருக்கிறார்களா? என்பது நாளது வரை உள்ள க்ரந்தங்களைப் பார்க்கவேணும். அவர்கள் என்ன சொல்லுகிறார்கள். இவர் என்ன சொல்லுகிறார். எது நமக்கு மனதுக்கு திருப்திகரமாக இருக்கிறது என்பதை முதலில் தெரிந்து கொள்ளவேணும்.

ஸ்ருஷ்டிக்கு முந்தின காலத்திலே சத் இருந்தது. காலம் இருந்தது. ஸச்சப்தவாச்யமான ப்ரம்ஹம் இருந்தது என்று தெரியவில்லை. காலம் என்பது ப்ரம்ஹத்திற்கு வேற்றுப் பொருள்

தானே. அப்போ ப்ரம்ஹத்தைக் காட்டிலும் அசித்துக் கிடையாது என்று சொல்லுகிற உங்களுடைய மதம் எப்படி நிர்வஹிக்கப்படும்? இந்த ஒரு கட்டு சுள்ளியில் ஒரு சுள்ளியில்லாதது போல கொஞ்சம் கலகலத்திருக்கிறது. இப்பொழுது காலம் என்கிற தத்துவத்தை அவர்கள் ஒத்துக் கொண்டுதான் ஆகவேணும். அது இல்லை என்றால் அக்ரே என்ற ஸ்ருதி விரோதமாகிறது. அந்த ப்ரம்ஹத்தையும் காலத்தையும் ஒன்று என்று சொல்லக்கூடாது. தனித்தனியாகத்தான் சொல்லவேணும். ப்ரம்ஹத்தையும் காலத்தையும் ஒன்று என்று சொன்னால் காலமானது ப்ரம்ஹஸ்வரூபமாய் இருக்கட்டும். ப்ரம்ஹமாவது ஜடமாக இருக்கட்டும். அந்த இரண்டையுமே ஒன்று என்று சொல்லமுடியவில்லை. அந்த ப்ரம்ஹத்தை போலே காலத்தையும் ஒத்துக் கொண்டால் இரண்டு தத்துவம் தேறும். அத்வைதம் போய்விடும்.

இனி ஜீவாத்மாக்கள் ஸ்ருஷ்டிக்கு முன்புள்ள காலத்தில் பலர் உண்டு என்று நம் ஸ்வாமி நிரூபணம் பண்ணியிருக்கிறார். அதைப்பற்றி கொஞ்சம் விரிவாகச் சொல்லுகிறேன். ப்ரம்ஹத்தைக் காட்டிலும் வேறுபட்டதாய் ப்ரம்ஹத்தோடு ஒத்ததாய் இருக்கும் ஜீவாத்மாக்கள் பலர் ஸ்ருஷ்டிக்கு முன்புள்ள காலத்திலே காலதத்வமுள்ளது போல உண்டு என்பதை ஸ்வாமி மிகவும் அழகாக நிர்ணயம் பண்ணியிருக்கிறார்.

இந்த மஹாப்ரளய காலம் என்றும் ஸ்ருஷ்டி காலம் என்றும் வேதாந்தத்திலே சொல்லுவர்கள். மஹாப்ரளய காலத்திலும் ஸ்ருஷ்டி காலத்திலும் எந்த தத்துவம் இருக்கிறதோ அந்த தத்துவம் ஸத்யம். ஒரு காலத்தில் இருந்து ஒரு காலத்தில் இல்லை என்றால் அது அசத்யம். அது மித்யை என்பது அவர்களுடைய கொள்கை.

நம் ஸ்வாமி, "மஹாப்ரளய காலத்திலும் அசித் தத்வம் இருக்கிறது. ஜீவ தத்வம் இருக்கிறது. ப்ரம்ஹம் என்கிற தத்வம் இருக்கிறது. ஸ்ருஷடி காலத்திலேயும் அசித் தத்வம் இருக்கிறது.

ஜீவாத்மாக்கள் பலர் உண்டு. பகவான் உண்டு. எல்லாக் காலத்திலேயும் எல்லா தத்வங்களும் இருக்கிறதாலே ப்ரம்ஹத்தைப் போலே எல்லா தத்துவங்களும் சத்யம்" என்று ஸ்தாபனம் பண்ணியிருக்கிறார்.

இந்த ஸ்ருஷ்டிக்கு முன்பு காலம் என்கிற தத்வம் உண்டு என்கிறதை அக்ரே என்கிற சப்தம் சொல்லுகிறது போலே ஸ்ருஷ்டிக்கு முன்பு ஜீவாத்மாக்கள் உண்டு என்று சாஸ்திரங்களிலே தெரிகிறது. அதை வைத்து ஏகம் என்கிற ஸப்தத்திற்கு அர்ததம் சொல்ல வேண்டும் என்பதற்கு ஒரு வழி காட்டுகிறார் ஸ்வாமி. அந்த வழியைக் கொஞ்சம் விவரித்துப் பார்க்கலாம். ப்ரம்ஹமானத்தாலே நூறு ஸம்வத்ஸரம் மஹாப்ரளய காலம். என்பதைக் கொஞ்சம் சொல்லி அனுபவிக்கவேணும். க்ருதயுகம். த்ரேதாயுகம். த்வாபரயுகம். கலியுகம் என்கிற நான்குக்கும் சதுர்யுகம் என்று சொல்லப்படுகிறது. ஆயிரம் சதுர்யுகம் கொண்டது ஒரு பகல் காலம். ஆயிரம் சதுர்யுகம் கொண்டது ஒரு இரவுக்காலம். இரண்டாயிரம் சதுர்யுகம் கொண்டது ப்ரம்ஹாவிற்குச் சேர ஒரு தினம். அப்படி 365 தினம் ஒரு ஸம்வத்ஸரம். அப்படி 100 ஸம்வத்ஸரம் அவருக்கு ஒரு ஆயுள். ப்ரம்ஹமானத்தாலே 100 ஸம்வத்ஸரத்திற்கு பரம் என்று ஸம்ஸ்க்ருத பாஷையிலே சொல்லப்-படுகிறது. இது ப்ரம்ஹாவினுடைய ஆயுஷைச் சொல்லுகிறது. முதல் 50 வருடம் இப்பொழுது ஆகிவிட்டது. இரண்டாவது 50 வருடம் ப்ரம்ஹாவிற்கு இப்பொழுது நடக்கிறது. அதனால் தான் ஸங்கல்பத்தில் "*த்விதீய பரார்தே*" என்று நாம் சொல்லுகிறோம். இந்த ப்ரம்ஹமானத்தாலே நூறு ஸம்வத்ஸரம் ப்ரம்ஹாவிற்கு ஆயுசு, ஸ்ருஷ்டி காலம். இதைப்போலே ப்ரம்ஹமானத்தாலே 100 ஸம்வத்ஸரம் மஹாப்ரளய காலம். அந்த மஹாப்ரளய காலத்தில் ஸர்வ ப்ரபஞ்சங்களும் பெயர் வடிவங்களை இழந்து ஜலத்தில் கரைந்த உப்பு போலே ப்ரம்ஹத்தினிடத்திலே கலந்து "*தம பரே தேவ ஏகீ பவதீ*" என்று ஸ்ருதி சொல்லுகிறது. அந்த மஹாப்ரளய காலம் ஆனதும், பகவான் மறுபடியும் ஸ்ருஷ்டியைத் தொடங்குகிறான். ப்ரளய காலம் ப்ரம்ஹமானத்தாலே 100 ஸம்வத்ஸரம் ஆகியுள்ளது. மறுபடியும் ஸ்ருஷ்டியினுடைய ஆரம்பகாலம். அந்த ஸ்ருஷ்டியினுடைய ஆரம்ப காலத்திலே சிலரை

தேவர்களாகவும். சிலரை மனுஷ்யர்களாகவும். சிலரைப் பசு பக்ஷிகளாகவும். சிலரை புல் பூண்டுகளாகவும் பகவான் ஸ்ருஷ்டிக்கிறான். தேவர்களுடைய சரித்திரத்தைக் கேட்கிறபொழுது அவர்களுக்கு சுகம் உண்டு என்று நன்றாகத் தெரிகிறது. மனுஷ்யர்களான நம்முடைய சரீரத்தைப் பார்க்கும் பொழுது சுக துக்கங்களை கலசி அனுபவிக்கிறோம். பசு பக்ஷிகளுக்கு நமக்கு இருக்கக்கூடிய சுகம் கூட இருப்பதாகத் தெரியவில்லை. புல்பூண்டுகளுக்கு ஞான விகாசமே நன்றாக இல்லை. ஸ்ருஷ்டியினுடைய ஆரம்பகாலத்திலே, பகவான், சுகங்களையே அனுபவிக்கும்படியாக தேவதைகளையும், சுக துக்கங்களை கலசி அனுபவிக்கும் படியாக மனுஷ்யர்களையும், துக்கத்தையே அனுபவிக்கும்படியாக பசு பக்ஷிகளையும், ஞான விகாசம் இல்லாமல் புற்பூண்டுகளையும் ஸ்ருஷ்டிக்கிறானே? இந்த வித்தியாசம் பகவானுக்குக் கூடுமா? எல்லாரையும் ஒரு வகையிலே செய்வதற்கு என்ன? என்று வேதாந்தங்களிலே விசாரம் வருகிறது. பகவானே கீதையில் சமாதானம் சொல்லியிருக்கிறான். வ்யாசர் சில சூத்திரங்களிலே பூர்வ சித்தாந்த ரூபமாக இந்த விஷயத்தைப் பற்றிப் பேசுகிறார். தேவர்களாக ஆரம்பகாலத்தில் சிலரைப் படைக்கிறானே, அது அவர்களுடைய கர்ம பலம். அவர்களுடைய கர்மாவைப் பொறுத்து தேவ சரீரத்தைக் கொடுத்து இருக்கிறான். சிலரை மனுஷ்யர்களாகப் படைக்கிறானே அது அவர்களுடைய கர்ம பலம். சிலரை பசுபக்ஷிகளாகப் படைக்கிறானே அது அவர்களுடைய கர்ம பலம். சிலரை புற்பூண்டுகளாகப் படைக்கிறானே அது அவர்களுடைய கர்ம பலம்.

*"தஸ்ய கர்த்தாரமபிமாம் வித்யகர்த்தாரமவ்யயம்"*

என்று கீதையிலே வாக்கியம். இதற்கு ஆசார்யர்கள் ஆச்சரியமாக வ்யாக்யானம் பண்ணியிருக்கிறார்கள். ஒரு தோட்டத்தை உழுது நன்றாக செப்பணிட்டு அவரை விதை விதைக்கிற காலத்திலே தண்ணீரைப் பாய்ச்சுகிற பொழுது அவரை விதை முளைத்து அவரைக் கொடி உண்டாகிறது. துவரை விதை முளைத்து துவரைச் செடி

உண்டாகிறது. அவரைக் கொடி அவரையைக் கொடுக்கிறது. துவரைச் செடி துவரையைக் கொடுக்கிறது. இவ்வாறு அவரையும் துவரையும் விதைத்து முளைக்கிற பொழுது மண், ஜலம் அவசியம் வேண்டி-யிருக்கிறது. ஆனால் அவரைக் கொடியின் காய், இலை ஒரு மாதிரியாகவும். துவரைச் செடியின் இலை, காய் ஒரு மாதிரியாகவும் இருக்கிறது. பொதுவாக ஒரு செடி முளைப்பதற்கு தரணி ஜல ஸம்யோகம் (மண், நீர் ) காரணம் என்று சாஸ்திரத்திலே சொல்லுவார்கள். அந்த முறையிலே அந்த வித்துக்கு தரணிஜல ஸம்யோகம் உண்டாகும் போது அந்தந்த செடி முளைக்கிறது. அவரை ஒரு விதமாகவும், துவரை ஒரு விதமாகவும். உண்டாவதற்கு அந்தந்த விதையிலுள்ள ஸூக்ஷ்மம் காரணம் என்று சொல்லப்படுகிறது. ஒரு வித்து முளைப்பதற்கு, இந்த பூமி, ஜலம் வேண்டியது போல் ஈஸ்வரன். அவரை ஒரு விதமாகவும், துவரை ஒரு விதமாகவும் இருக்கிறது என்று சொல்லுகிறோம். அது போல தேவ சரீரம், மனுஷ சரீரம், பசு பக்ஷி, புற்பூண்டு சரீரம் எடுப்பதற்கு அவரவர் கர்மா காரணம்.

***"தஸ்ய கர்தாரமபிமாம் வித்யகர்தார மவ்யயம்.***
***ந மாம் கர்மாணி லிம்பந்தி நமே கர்ம பலை ஸ்ப்ருஹா"***

இப்படிப்பட்ட பகவத் வாக்கியத்தில் இப்படி தத்வத்தைக் காட்டியி-ருக்கிறார்கள். பகவானுக்கு ஜீவாத்மாக்களிடத்தில் வைஷம்யம் (வேறுபாடு) கிடையாது. பக்ஷபாதமும் (ஏற்றத்தாழ்வு) கிடையாது. மஹாப்ரளய காலம் முடிந்து ஸ்ருஷ்டி ஆரம்ப காலத்தில் சிலரை தேவர்களாகவும், சிலரை மனுஷ்யர்களாகவும், சிலரை பசு பக்ஷிகளாகவும், சிலரை புல் பூண்டுகளாகவும் பகவான் ஸ்ருஷ்டிக்கிறது, அவரவர்களுடைய கர்மாவைப் பற்றி என்று வ்யாஸர் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறார். பகவானுக்கு வைஷம்யமும் (வேறுபாடும்) கிடையாது. நைர்க்ருந்யமும் (இரக்க-மின்மையும்) கிடையாது. அவரவர்களுடைய கர்மானுகுணமாக ஆதியில் ஸ்ருஷ்டிக்கிறார்.

இப்பொழுது என்ன சொல்ல வேண்டியிருக்கிறது என்றால், **"எல்லாம் அழிந்த காலத்திலே பகவான் என்கிற பொருள்**

**அழியாதிருக்கிறது போலே அந்தந்த ஜீவாத்மாக்களுக்கும் அழிவில்லை. அந்தந்த ஜீவாத்மாக்கள் செய்த கர்மாக்களுக்கும் அழிவில்லை. அதனாலே தான் மஹா ப்ரளய காலம் முடிந்து ஸ்ருஷ்டி கால ஆரம்பத்தில் அவரவர்கள் கர்மாநுகூலமாக விசித்ர தேஹத்தை ஈஸ்வரன் ஸ்ருஷ்டி பண்ணிக்கொடுக்கிறான்".** இப்படி சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறார்கள். ஜீவாத்மாக்கள் எப்பொழுதும் இருக்கிறவர்கள், அவர்கள் நித்யர்கள். இதை,

**" நித்யோ நித்யானாம் சேதனஸ் சேதனானாம்**
**ஏகோ பஹூனாம் விததாதி காமான் "**

என்ற ஸ்ருதியே சொல்லுகிறது. ப்ரளய காலத்தில் ஜீவாத்மாக்கள் பலர் உண்டு என்று இசைய வேண்டும். அது இல்லாமல் போனால் மறுபடியும் ஸ்ருஷ்டி ஏற்படுகிற காலத்திலே சரீரம் வெவ்வேறாயும் சுகதுக்கங்கள் வேறு வேறாயும் ஒவ்வொருவிடத்தில் பார்க்கப்படுகிறதே இதை நிர்வஹிக்க முடியாது.

இப்பொழுது என்ன தேறிற்று என்றால், எல்லாம் அழிந்த காலத்தில், ஸ்ருஷ்டிக்கு முன்பு இருந்த காலத்தில், காலம் என்பதை ப்ரம்ஹத்திற்கு வ்யதிரிக்தமாக (வேற்றுப் பொருளாக) ஒத்துக் கொள்வது போல, அக்ரே என்ற சப்தத்தை ஒத்துக்கொள்வது போல, அந்த சப்தார்த்தத்தை ஒத்துக்கொள்வது போல, எல்லாம் அழிந்த காலத்திலும் கூட எண்ணிறந்த ஜீவாத்மாக்கள் உண்டு, அவரவர்கள் செய்த கர்மாக்கள் உண்டு, இந்த கர்மா கட்டாயம் உண்டு என்று தேறுகிறது. அதனாலேதான் ஸ்ருஷ்டி காலத்தில் விசித்ர ஸ்ருஷ்டி, விஷம ஸ்ருஷ்டி ஏற்படுகிறது. இவற்றில் பகவானுக்கு சம்பந்தமில்லை என்று வேதாந்தம் நிர்ணயிக்கிறது. பரமாத்மாவோடு ஒத்த பொருளான ஜீவாத்மாக்களும் உண்டு. வேற்றுப்பொருளான அசேதனங்களும் உண்டு என்று தெரிகிறது. ஸூக்ஷ்மமான ப்ரளயகாலத்தில் ப்ருக்ருதி தத்துவமும் உண்டு என்று தெரிகிறது. ப்ரக்ருதி தத்துவத்தை ப்ரளய காலத்தில் அழிக்கிற-தில்லை அது. ஸ்பஷ்டமாக ப்ரமாணம் இருக்கிறது.

**" அஜாம் ஏகாம் லோஹித ச சுக்லக் க்ருஷ்ணாம் "**

என்று ஒரு வேத வாக்கியம். அஜை என்று (அசேதனத்ததை) ப்ரக்ருதியைச் சொல்லுகிறது. ப்ரளய காலத்திலே கூட அது சூக்ஷ்மமான பொருளாக இருக்கிறது. ஆனால் நாம் உலக அனுபவத்தை ஒட்டிப் பார்க்கவேண்டும். குடத்தைக் குயவன் செய்கிறான். துணியைச் சேனியன் நெய்கிறான். குடத்தைச் செய்யக்கூடிய ஞானசக்திகள் அவனுக்கு இருக்கிறது. அதனால் அவன் செய்கிறான். அதுபோல வஸ்திரத்தை நெய்யக்கூடிய ஞான சக்திகள் அவனுக்கு இருக்கிறது. அதனால் அவன் நெய்கிறான். ஒருவனிடமிருந்து ஒரு காரியம் உண்டாகும்போது அந்த காரியத்தைச் செய்வதற்கு ஈடான ஞானசக்தியை ஒத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. இந்த ப்ரபஞ்சம் என்கிற காரியத்தை, பகவான் காரணமாயிருந்து செய்கிறானே! இந்த ப்ரபஞ்சத்தை உண்டு பண்ணுவதற்கான ஞானசக்திகள் அவனுக்கு உண்டு என்பதை நாம் அவசியம் ஒத்துக்கொள்ள வேணும்.

" *பராஸ்ய ஸக்தி: விவிதைவ ஸ்ரூயதே ஸ்வாபாவீகீ ஞான பல க்ரியாச* "

என்று ஸ்ருதியானது பகவானுக்கு ஞானம் உண்டு, சக்தி உண்டு, பலம் உண்டு, நியமன சக்தி உண்டு என்று கல்யான குணங்களைச் சொல்லுகிறது. ஸ்வாபாவிகம் (இயல்பு) என்றும் சொல்லுகிறது.

வேற்றுப்பொருள் கிடையாது என்று சங்கரர் சொல்லுகிறார். காலம் என்று வேற்றுப்பொருள் ஒன்று சொல்லப்பட்டு இருக்கிறதே. ப்ரளய காலத்திலே கூட சூக்ஷ்மமான ப்ரக்ருதி தத்வம் உண்டு என்று ஸ்ருதிகளில் தெரிகிறதே! வேற்றுப்பொருள் இல்லை என்று எப்படிச் சொல்லுகிறது?. ப்ரம்ஹ வ்யதிரிக்தமாக ஜீவாத்மாக்கள் கிடையாது என்று சங்கரர் சொல்கிறார். எல்லாம் அழிந்த காலத்தில் கூட நித்யமான ஜீவாத்மாக்கள் உண்டு. அசித் உண்டு. நாம் செய்த கர்மாக்களும் உண்டு. அதனால் தான் ஸ்ருஷ்டி காலத்திலே அந்தந்த ஜீவனுக்கு அவனவன் செய்த கர்மானு குணமாக சரீரத்தை உண்டு பண்ணிக்கொடுத்து சுகதுக்காதிகளை பகவான் அந்த கர்மானுகுணமாகக் கொடுத்து நிர்வகிக்கிறான் என்று சாஸ்திரம்

தெரிவிக்கிறது. இதனால் ஸஜா தீய பொருள் (ஒத்த பொருள்) உண்டு என்று தெரிகிறது. அவனுக்கு ஞான சக்த்யாதி குணங்கள் உண்டு என்று சொல்லவேண்டியிருக்கிறது. "**அபாணி பாதோ ஜவனோ க்ருஹீதா**" என்று பாணி பாதங்கள் இல்லை என்று சொன்னாலும் கூட அவனுடைய பெருமைக்குச் சேர திவ்ய மங்கள விக்ரஹம் உண்டு என்பதை,

***"ய ஏஷோந்தராதித்யே ஹிரண்ய புருஷ: ஹிரண்ய ஸ்மஸ்ரு: ஹிரண்ய கேஸ: ஆப்ரணகாத் ஸர்வ ஏவ ஸுவர்ண தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீக மேவம் அக்ஷிணீ "***

என்று அந்த பகவானுடைய போக்யமான விக்ரஹத்தைச் சொல்லி இந்த லக்ஷணங்கள் எல்லாம் சொல்லுகிறது. "இப்படி வேதாந்தங்களிலே குணங்களோடு கூடினவன், விக்ரஹங்களோடு கூடினவன், எல்லாம் அழிந்த காலத்திலுங்கூட அவனோடு ஒத்த பொருள்களான ஜீவாத்மாக்களும் உண்டு, அசேதனப் பொருட்களும் உண்டு, அந்த ப்ரம்ஹம் அவைகளோடு சேர்ந்தே இருக்கிறது, அந்த காலத்திலே கூட சரீராத்ம பாவம் உண்டு என்று ஸ்பஷ்டமாக நமக்குத் தெரியுமேயானால் அப்போது விசிஷ்ட ப்ரம்ஹம் தான் ஒத்துக்கொள்ளவேண்டும்". ஒன்றுமே கிடையாது என்று சொன்னால் அக்ரே என்று சொல்லியிருக்கிறதே அஜாம் ஏகாம் என்று அஜை என்று அந்த ப்ரக்ருதி (அசேதன) தத்துவத்தைச் சொல்லுகிறதே! ஜீவாத்மாக்கள் உண்டு, அவர்கள் நித்யர்கள், அவர்களுடைய கர்மங்களும் உண்டு என்று "**நித்யானாம் சேதனானாம் பஹூனாம்**" என்ற இடத்திலே நாம் ஒரு விதமாகப் பார்க்கும் படியாக இருக்கே! அந்த பகவானுக்கு கல்யாண குணங்களும் உண்டு என்று ஸ்ருதி சொல்லுகிறதே! ஆகையினாலே சுத்தம் என்று வேதவாக்யத்தைக் கொண்டுதான், அந்த ப்ரம்ஹமானது குணங்களோடும் விக்ரஹத்தோடும் சேதனங்களோடும் அசேதனங்களோடும் கூடியதாய் இருக்கு. என்றைக்கும் விசிஷ்டமானது தான் என்று நம்ம ஸ்வாமி சாஸ்த்ரங்களைக் கொண்டு எடுத்துக் காட்டுகிறார். இதை நடுநிலையிலே இருந்து நாம் பார்ப்போமேயானால், அந்த ப்ரம்ஹம் விசிஷ்டமாகத்தான் இருக்கக்கூடும். சுத்தமாக இருப்பதற்கு நியாய-

மில்லை என்பது நம்ம மனதிலே கூட எல்லாருக்கும் படக்கூடிய விஷயந்தான். ஆனால் இப்பொழுது "விசிஷ்ட ப்ரம்ஹம் சாஸ்திர சித்தம்" என்பதை ஒருவிதமாக நாம் பார்த்தோம். ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்ப்பது என்ற முறையிலே கூட தேறாது. பதம் பார்க்கிற முறையிலேதான் நாம் பார்த்திருக்கிறோம். எத்தனை விதமாக அதுக்கு பரிகாரத்தைச் சொல்லியிருக்கிறார்!, ஸ்ருதியோடு தாத்பர்யத்தை நிர்ணயிப்பதற்கு வழிகள் காட்டி-யிருக்கிறார்! என்பது நம்முடைய மனதில் படுமேயானால் இராமானுஜருடைய அந்த க்ரந்தங்களை நாம் சொல்லி அனுபவித்துக் கேட்டு வருகிற போதுதான் அந்த ரசம் நன்றாகத் தெரியும். ப்ரம்ஹம் உண்டு, ப்ரம்ஹத்திற்கு குணமே கிடையாது. ப்ரம்ஹம் உண்டு. ப்ரம்ஹத்திற்கு தர்மம் (குணம்) உண்டு என்று சொன்னால் வஸ்து இரண்டாய் போய்விடும். அப்பொழுது அத்வைதம் போய்விடும். இந்த வாதத்திற்கு பரிகாரம்பட பலவிதமாகச் சொல்கிறார்.

சாதாரணமாக "*உபநிஷத்துக்கள்*", "*ப்ரம்ஹ ஸூத்ரங்கள்*", "*பகவத் கீதை*" இந்த மூன்று வகையிலுள்ள க்ரந்தங்களுக்கு "**ப்ரஸ்தான த்ரயம்**" என்று பெயர். *அத்வைதமோ, த்வைதமோ, விசிஷ்டாத்வைதமோ* அந்தந்த மதஸ்தர்கள் அந்தந்த மதத்தை ப்ராமாணிகம் - ப்ரமாணங்களிலே தேறின அர்த்தம் என்று தத்துவங்களை ஸதஸ்ஸிலே (சபையிலே) பேசுகின்ற காலத்திலே ப்ரமாணங்களைக் கொண்டு சொல்லுகிறபோது இந்த மூன்று வகையிலுள்ள ப்ரமாணங்களிலே அவசியம் ஆதரிக்கப்பட-வேண்டிய ப்ரமாணங்கள். அந்த மூன்று வகையிலுள்ள ப்ரமாணங்களிலே உபநிஷத்துக்களில் ஒருவிதம் விசாரம் செய்ய வேண்டும். ப்ரம்ஹசூத்ரங்களில் தத்வவிசாரம் ஒரு புறமாய் இருந்தாலும் அந்த ப்ரம்ஹ சூத்திரத்திற்கு அர்த்தம் சொல்லுகிற முறை, அந்த வேதவாக்யங்களைக் காட்டி ஸ்வாமியுனுடைய க்ரந்தத்தை அனுபவிக்க வேண்டும். பகவத் கீதையின் பாஷ்யத்தை அனுபவிக்க வேண்டும். அந்த ப்ரமாணங்களை நன்றாக அனுபவிக்கிற போது விசிஷ்ட ப்ரம்ஹம், "அந்த விசிஷ்ட ப்ரம்ஹம் நாராயணன்" என்று சொல்லுவதற்கு எவ்வளவோ ஆதாரங்கள் இருக்கிறது. நம் ஸ்வாமி எந்த பாதையிலே போயிருக்கிறார், ப்ரமாண க்ரந்தங்களுக்கு எப்படி

அர்த்தம் சொல்லுகிறார் என்பதை அனுபவிக்கிற காலத்திலே, "தஸ்ய காலம் பாஷ்யம்" என்று ஸ்வாமி பாஷ்யத்தை "தேசிகன்" கொண்டாடுகிறார். தத்வவாதி என்று அவர் கொண்டாடப் பெற்றவர்.

கீதையிலே ஒரு சின்ன விஷயம். சின்ன விஷயம்னா அது நம்ம சித்தாந்தத்தை மிகவும் அழகாக காட்டுகிற விஷயம். பகவானுக்கு தன் குணங்களையும் தன் விபூதிகளையும் சொல்லுகிறபோது ரொம்ப சந்தோஷம். என்னைப்போல விபூதிமான் கிடையாது என்று தன் உள்ளத்தைச் சொல்லி மகிவும் சந்தோஷப்பட்டு இருக்கிறான். அர்ச்சுனன் கேட்கிறான்!

**"ஸர்வ மேதத்ருதம் மன்யே"**

நீ சொல்கிறதெல்லாம் சத்யம் என்கிறான். ருதம் என்ற சப்தம் சத்யம் என்ற அர்த்தத்தைக் காட்டுகிறது. நான் ஸ்வாமி, எனக்கு ஐஸ்வர்யங்கள் இவை, என்னுடைய விபூதிகள் இவை, என்னுடைய கல்யாண குணங்களையும் விபூதிகளையும் எவன் கேட்கிறானோ அவனுக்கு பக்தி உண்டாகும், பக்தி வளரும். இந்த அர்த்தத்தை 10வது அத்யாயத்திலே பகவான் சொல்லி வருகிறபோது,

**"ஏதாம் விபூதிம் யோகஞ்சா மமயோகஞ்ச தத்வத: "**

விபூதியும் கல்யாண குண சம்பந்தத்தையும் அறிகிறவனுக்கு பக்தி நன்றாக உண்டாகும் என்கிறதை பகவான் சொல்கிறான். அர்ச்சுனன் கேட்டு "ஸர்வ மேதத்ருதம் மன்யே" என்று சொல்லி விஸ்தாரமாகச் சொல்லவேணும் என்று கேட்டு இருக்கிறான். 11வது அத்தியாயத்திலே திவ்யக்கண்ணைக் கொடுத்து தன் திருமேனியிலே விபூதிகளை பகவான் காட்டி இதனை அனுஷ்டித்திருக்கிறன். இந்த "ஸர்வ மேதத்ருதம் மன்யே" என்று கீதையிலே சொல்லுகிறது, "திவ்யக்கண்ணைக் கொடுத்து தன் திருமேனியிலே இந்த பிரபஞ்சம் தரிக்கப்படும் விதத்தை பகவான் காட்டிக் கொடுத்து அனுபவித்திருக்கிறானே" 11ஆம் அத்தியாயத்தில், அதிலே "ப்ரபஞ்சமும் சத்யம், பகவானும் சத்யம், அந்த பகவான் ப்ரபஞ்சத்தோடு சேர்ந்தவன், நாராயணன்" என்கிற அர்த்தம் மிக

நன்றாக ப்ரகாசிக்கிறது. அங்கு நன்றாக கவனிக்க வேண்டும்.. இந்த உலகம் பொய்யாக இருக்குமேயானால், அர்ஜுனனுக்கு திவ்யக்கண்ணைக் கொடுத்து தன் திருமேனியிலே உலகம் தரிக்கப்படுகிறதை பகவான் காட்டிக் கொடுப்பானா? அது திவ்ய சக்ஷுஸாலே (கண்ணாலே) அறியப்படுகிற தத்வமாக உலகம் இருக்கு என்கிற உண்மை கீதையிலே தெரிகிறதே!, உலகம் பொய்யாக இருந்தால் இப்படிக் காட்டிக் கொடுப்பனா? இதை நன்றாகப் பார்க்க வேணும். "*லோகத்ரயம் ப்ரவ்யதிதம்*" என்கிற வாக்கியம் 11வது அத்தியாயத்திலே வருகிறது. "*லோகத்ரயம் ப்ரவ்யதிதம்*" என்கிற இடத்திலே நம் ஸ்வாமி அழகாக அர்த்தம் சொல்லியிருக்கிறார். திவ்யக்கண்ணைக் கொடுத்து விஸ்வரூபத்தை காட்டுகிற காலத்திலே அர்ஜுனனுக்கு மட்டும் திவ்ய சக்ஷுஸைக் (கண்ணை) கொடுக்கவில்லை. ப்ரம்மா முதலான தேவதைகளுக்கும் பகவான் திவ்ய சக்ஷுஸைக் (கண்ணை) கொடுத்திருக்கிறான். அந்த விஸ்வரூபத்திலே "சம்ஹர்த்ருத்வம்" (அழிக்கும் நிலை) என்கிற தத்வம் ப்ரகாசிக்கிறது. பகவான், தான் சம்ஹர்த்வா (அழிக்கிறவன்) என்கிற தன்னுடைய சிறப்பை அர்ஜுனனுக்கு திவ்ய சக்ஷுஸைக் (கண்ணை) கொடுத்து காட்டிக் கொடுத்தி-ருக்கிறான். அதே காலத்திலே ப்ரம்மா முதலான தேவதைகளுக்கும் திவ்யக்கண்ணை கொடுத்து அந்த சம்ஹர்த்ருத்வத்தைப் ப்ரகாசப்படுத்துகிறான். இவன் எப்படி நடுங்குகிறானோ அதேபோல் ப்ரம்மா முதலான தேவதைகள் நடுங்குகிறார்கள். "*ப்ரம்மா முதலான தேவதைகளைக் காட்டிலும் கிருஷ்ணன் நாராயணன் மேம்பட்டவன்*" என்கிற தத்வம் அர்ஜுனனுக்கு மனதிலே படவேண்டும். அதை அவன் பார்த்தால் பகவானின் "பரத்வம்" (மேன்மை) நன்றாக வெளிப்படும். அதனால்தான் திவ்ய சக்ஷுஸைக் கொடுத்து ப்ரம்மா முதலான தேவர்களுக்கும் அதைக் காட்டி அவர்கள் நடுங்குவதையும் அர்ஜுனன் பார்க்கும்படியாகச் செய்திருக்கிறான்.

சுருக்கமாகச் சொல்லப்போனால், வேதாந்தம் அனாதியானது. எல்லாருக்கம் அதில் ஒரு ச்ரத்தை (ஈடுபாடு) ஏற்பட்டு, அவருடைய க்ரந்தங்களை அறிந்து, "*விசிஷ்டப்ரம்மம் உயர்ந்த விஷயம்*" என்பதை இவ்வாறு உணர்ந்து, "*அந்த பரம புருஷன் சாக்ஷாத்*

நாராயணன்", "அவனிடத்தில் நமக்கு பக்தி வேண்டும், ப்ரபத்தி வேண்டும், அவனுடைய சரணாரவிந்தங்களைக் கிட்டி அனுபவித்து, அதிலேதான் நமக்கு ஆத்ம க்ஷேமம்" என்கிற இந்த சித்தாந்தம் எங்கும் ஓங்கித் தழைக்க வேணும் என்று திருவுள்ளம் பற்றித்தான் ஸ்வாமி எம்பெருமானார் அவதாரம் பண்ணியிருக்கிற காலத்திலே அவருடைய திருவடிசம்பந்தம் படாத இடமே இல்லை. சாளக்ராமம் பர்யந்தம (முதலாக) அவர் எழுந்தருளியிருக்கிறார். அங்கங்கே கோயிலிலே மதப்ரசாரத்தை மிக அழகாகச் செய்திருக்கிறார். அதுவும் மேல்நாடு என்று சொல்லக்கூடிய இந்த இடங்களிலே சுவாமியினுடைய திருவடி சம்பந்தம் பல இடங்களிலே ஏற்பட்டிருக்கிறது. அனாதியான லோகத்திலே மறைந்து கிடந்த அந்த அர்த்த விசேஷங்களைப் ப்ரசித்தப்படுத்தி எல்லோரும் ஆத்ம க்ஷேமம் பெற வேண்டும் என்று பாடுபட்டிருக்கிறாரே, அது கால வசத்தாலே மறைந்து இருந்தாலும் கூட அவருடைய திருவடிகளிலே ப்ரீதி (பக்தி) உள்ளவர்கள், அந்த சித்தாந்தம் ஓங்கித் தழைக்க வேணும், எல்லாருடைய ஆத்ம க்ஷேமத்திலே் பர்யவசிக்க (முடிய) வேணும் என்ற நிலையிலே வந்து சேர வேணும் என்று ப்ரார்த்தித்து அடியேனுடைய சின்ன வார்த்தையை இப்போது பூர்த்தி செய்து கொள்கிறேன்.

**ஸ்ரீமந் மஹா பூதபுரே ஸ்ரீமத் கேசவ யஜ்வந :**
**காந்திமத்யாம் ப்ரஸூதாய யதிராஜாய மங்களம்.**

**சுபம்**

